# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

௨




விஜய - பங்குனி - 2014 - மார்ச்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விஜய - பங்குனி - 2014 - மார்ச்    இதழ் - 21

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

அரைமதி சூடிய அம்பல வாணன்
ஆடிய பாதன் அழகுரு வானோன்
அணிபரஞ் சோதி விரிசடைக் கடவுள்
அமரர்கள் நாதன் குமரனின் தாதை
வரையிடங் கொண்ட பிறையணி சோதி
வளந்தரு கொற்ற வாளிறை துணைவி
வானவர் தானவர் வணங்கிட நிற்போள்
வையகம் அளந்த மாலவன் தங்கை
திரைகடல் ஆடை உடுத்தவள் வையத்
தினர்தினம் வாழத் திருவருள் புரிவோள்
தென்கடல் வரைப்பில் குமரிதன் இடமாத்
தேர்ந்தவள் கூடல் திருநக ராண்ட
திரிபுர சுந்தரி திருநெலை மாதின்
திருவடி பணிவர் தினம்புகழ் பெறுவர்
திருத்திகழ் சாலி வனமுறை தேவி
திருவருள் நமக்கு வருவது தெரிவீர்.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர்
நா. மீனவன்



# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

பெற்றோருக்கு அடுத்தபடியாக இறைவனுக்கு ஒப்பாக நாம் கருதுவது குருவையே. எழுத்தறிவித்தவன் இறைவனாகும் என்பது தமிழர் பழமொழி. பண்டைக்காலம்தொட்டு ஆசிரியர்களுக்குத் தனி மரியாதை கொடுக்கப்பட்டு வந்துள்ளது.

கடந்த தலைமுறைகளிலே கல்வி, கலை, ஆன்மீகம் முதலியவைகள் குருகுல முறையாகத்தான் கற்பிக்கப்பட்டு வந்துள்ளன. 19ஆம் நூற்றாண்டுகளிலே குருகுல முறையிலோ அல்லது திண்ணைப் பள்ளிக்கூட முறையிலோ கல்வியும், கலைகளும் கற்பிக்கப்பட்டு வந்தன. பின்னர் ஆங்கிலேயருடைய ஆதிக்கத்தால் ஆங்கிலக்கல்வி முறையும், ஆங்கிலவழிக்கல்வி முறையும் பழக்கத்திற்கு வந்தன. 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திண்ணைப் பள்ளிக்கூடம் அல்லது ஏட்டுப்பள்ளிக்கூடங்களிலேதான் தமிழ் பிழையின்றிப் படிக்கவும், நன்னெறிப் பாடல்களையும், அடிப்படைக் கணிதத்தையும் மட்டுமே போதித்து வந்தன. ஆறாம் வகுப்பிலே சேரும்பொழுதுதான் ஆங்கிலம் அறிமுகம் செய்யப்பட்டது.

சைவமும், வைணமும், நம் மடம் கடைப்பிடிக்கும் வேதாந்தம் போன்ற அனைத்துச் சமயங்களிலும் குருவினுடைய முக்கியத்துவம் அழுத்தமாகக் கூறப்படுகின்றது. ஓர் ஆன்மீகச் சாதகர் குருவின் துணையின்றி உலக பந்தங்களிலிருந்து விடுபட்டு வீடுபேறு அடைவது நடைபெறமுடியாத ஒன்றாக அழுத்தமாகக் கூறப்படுகின்றது. வேதாந்த நூல்களில் சீடர்களும், குருவும் எண்வகையாக தராதரப்படிப் பிரிக்கப்படுகின்றனர்.

லௌகீக உலகியலில் ஆசிரியர்களைக் கீழ்க்கண்ட வகையில் மூவகையாகப் பிரிக்கலாம்:

1. நல்லாசிரியர் 2. நடுத்தர ஆசிரியர் 3. சாதாரண ஆசிரியர்.

இன்றைக்கு இருக்கின்ற சூழ்நிலையில் மனமும், கருத்துமொன்றி மாணவர்கள் பால் அன்பும் பிரியமும் கொண்டு பாடம் போதிக்கின்ற ஆசிரியர்கள் குறைவாகவே காணப்படுகின்றனர். அடுத்ததாகத்

தன்னுடைய கடமையை உணர்ந்து செயலாற்றுகின்ற ஆசிரிய பெருமக்களே பெரும் பகுதியாக உள்ளனர். மூன்றவதாகச் சிறு பகுதியினர் வாங்குகின்ற சம்பளத்தின் பெயரிலும், பெறக்கூடிய சலுகைகளை மட்டுமே மனதில் கொண்டு கடனுக்குப் பாடம் நடத்துகின்றவர்கள். இவர்களாலே குழந்தைகளின் கல்வித் தரமும் முன்னேற்றமும் திண்ணமாகப் பாதிக்கப்படும். மேலும் இவர்கள் வேலை செய்யும் கல்வி நிறுவனங்களுக்கும் இழுக்கு ஏற்படலாம். இந்தக் கடைசிவகை ஆசிரியப் பெருமக்கள் ஆசிரியத் தொழிலைத் துணைத்தொழிலாகவும், மற்ற வணிகச் செயல்பாடுகளை முதன்மைத் தொழிலாகவும் கொண்டு இயங்குபவர்கள். இப்படிப்பட்டவர்களை இனம் கண்டு திருத்துவோம் அல்லது ஒதுக்குவோம்.

மேற்கூறிய முதன்மைத் தரமான ஆசிரியர்கள் சுய ஈடுபாட்டோடும், குழந்தைகள் மேல் உள்ள உண்மையான அன்போடும், மாணவர்களை நல்வழி நடத்துபவர்கள். அப்படிப்பட்ட ஆசிரியர்களிடம் கற்ற மாணவர்கள் பல ஆண்டுகள் கழித்தும் நினைவில் வைத்து மரியாதை செய்வார்கள். இதனை என்னுடைய அனுபவத்திலேயே கண்டு இருக்கின்றேன். நான் தூத்துக்குடி வ.உ.சி.கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றியது மூன்றாண்டுகள் மட்டுமே. 35 ஆண்டுகள் கழித்து என்னை அடையாளம் கண்டு வணங்கிய மாணவர்கள் உண்டு. இந்த அனுபவம் ஆசிரியத் தொழிலைத் தொண்டாகவும், நல்ல பணியாகவும் கருதி மாணவர்களை வழி நடத்துகின்ற ஆசிரியர்கள் அனைவருக்கும் கிடைத்திருக்கும். அப்பொழுது கிடைக்கின்ற மகிழ்ச்சிக்கு ஈடு இணை ஏதும் இல்லை. அப்படிப்பட்ட ஆசிரியர்களைப் போற்றிப் பாராட்டி வளர்ப்போம். அப்பொழுதுதான் அத்தகு ஆசிரியர் தொகை பெருகும்.

மாணவர்களும் ஆசிரியப் பெருமக்களை மதிப்புடனும், மரியாதையுடனும் நடத்த வேண்டும். ஆசிரியர்களுக்குக் கீழ்ப் படிந்து நடப்பது மரியாதைக் குறைவில்லை. காலையில் பள்ளிக்கு வந்தவுடன் ஆசிரியர்களுக்கு வணக்கம் தெரிவித்து அவர்கள் நடத்துகிற பாடங்களைத் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். புரியாத இடங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். ஆசிரியர்களை

மதிப்பதே நல்ல பண்பு. அஞ்சுவது நல்ல பண்பல்ல. ஏற்படுகின்ற சந்தேகங்களைப் பணிவுடன் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியது மாணவர்களுடைய கடமை மற்றும் உரிமை.

குருகுல காலத்திலே குருவினுடைய தேவைகள் அனைத்தையும் கற்கின்ற சீடர்களே செய்யக் கடமைப் பட்டவர்கள். ஆன்மீகத்திலே குருசேவை மிக முக்கியமாகக் கருதப்படுகிறது.

**திருமந்திரப் பாடல் :**

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருஉருச் சிந்தித்தல் தானே !

**குரு சேவை நால்வகை :**

ஆப்தம், அங்கம், தானம், சத்பாவம் - எனப்படும்.

குருவினுடைய விருப்பங்கள், சுய தேவைகளை அறிந்து பூர்த்தி செய்வது, உடலுக்கு இதம் செய்வது, அவருடைய ஆஸ்ரமப் பொருட்களை, மற்றும் உடமைகளையும் பாதுகாப்பது, என அனைத்துக் காரியங்களையும் சீடர்களே செய்து வந்தார்கள். நல்ல குருவை இறைவனாகவே கருதி, அவர் சொல்லியவற்றைத் தெய்வ மந்திரங்களாக ஏற்றுக் கடைப்பிடிப்பது சீடர் சிறப்பு. இந்தக் குருகுல முறைக் கல்வியே பாரத நாட்டின் பண்பாடும் கலாச்சாரமும் பல்லாயிரம் ஆண்டுகளாக நிலைத்து நிற்க வழி வகுத்தவை.

இன்றையக் காலக் கட்டத்தில் இப்படிப்பட்ட குருகுல முறையை நம்மால் கடைப்பிடிக்க முடியாது என்றாலும், ஆசிரியர், மாணவர் உறவை நிச்சயமாக வளர்க்க முடியும். வளமாக்க முடியும். இதற்கு ஆசிரியர்களிடம் அன்பும், ஆதரவும், மாணவர்களிடம் பண்பும், ஆர்வமும் மட்டுமே தேவை. இவை இருந்தால் தளராத தொடர் முயற்சியால் நம்முடைய மாணவர்களை எல்லா நலங்களையும், வளங்களையும் பெறவைக்க முடியும். நல்ல பண்பாளர்களா ஆக்க முடியும்.

ஸ்ரீ சற்குருநாதன் துணை

ஸ்ரீசேஷாத்ரி சிவனார் அருளிய

# நா நா சீவ வாதக் கட்டளை (தொடர்ச்சி)

உரை விளக்கம் : சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

## நூல்

இனி ஸ்தூல பூத உற்பத்தி சொல்லுகின்றோம். அஃது எங்ஙனம் எனின் :- தமோ அம்சமாய் இருக்கின்ற ஐந்து பூதங்களையும், ஒவ்வொன்றை இரண்டு இரண்டாகப் பகுத்து, முதற்பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை நான்கு நான்காகப் பகுத்து, இரண்டாம்பாதி ஐந்தில், தன் அம்சத்துடனே கூட்டாமல் மற்றை நான்கு பூதங்களுடன் அரைக்கால் அரைக்கால் மாத்திரையாகக் கொடுக்கின்றது பஞ்சீகரணம் என்று சொல்லப்படும். இப்படிப் பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூல பூதங்களிலே ஆகாசத்திலே பரிச, ரூப, ரஸ, கந்தம் ஆகிய நான்கு குணங்களும் வியாப்பியம் ஆனபடியினால் அதிருசியமாய்ப் போக நிசகுணமாகிய சத்தம் திருசியமாம். வாயுவிலே ரூப, ரஸ, கந்தம் ஆகிய மூன்று குணங்களும் வியாப்பியம் ஆனபடியினால் அதிருசியமாய்ப் போகக் காரண குணமாகிய சத்தமும், நிச குணமாகிய பரிசமும் திருசியமாம். அக்கினியிலே ரஸ, கந்தம் ஆகிய இரண்டு குணங்களும் வியாப்பியம் ஆனபடியினால் அதிருசியமாய்ப் போகக் காரண குணங்களாகிய சத்த, பரிசமும், நிச குணமாகிய ரூபமும் திருசியமாம். அப்புவிலே, கந்தகுணம் வியாப்பியம் ஆனபடியினால் அதிருசியமாய்ப் போகக் காரண குணங்களாகிய சத்த, பரிச, ரூபமும், நிச குணமாகிய ரஸமும் திருசியமாம். பிருதிவியிலே, காரண குணங்களாகிய சத்த, பரிச, ரூப, ரஸமும், நிச குணமாகிய கந்தமும் திருசியமாம்.

## விரிவுரை

**தூல பூதங்கள் உற்பத்தி :**

இதுவரை முக்குண பூதங்கள் ஐந்தினுடைய சத்துவகுணத்தின் செயல் பாடுகள், ரஜோ குணத்தின் செயல்பாடுகள் ஆகியவற்றைப்

பார்த்தோம். சத்துவகுணத்தை உடன் ஐம்பூதங்களின் கலப்பால் அந்தக்கரணம் ஐந்தும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் தோன்றின. ரஜோ குணத்தை உடன் ஐம்பூதங்கள் கலப்பால் கர்மேந்திரியம் ஐந்தும் வாயுக்கள் ஐந்தும் தோன்றின.

இவையாவும் தனித்தனியாக உள்ளவை. எனவே இவை வெளித் தோற்றம் பெறாதவை. செயல் வல்லமையும் அற்றவை. சூட்சும சரீரத்தில் அடங்கி இருப்பவை. இவை (Potential Energy) இயங்கா இருப்பு சக்தி கொண்டவை.

சூட்சும ஐம்பூதங்களும் தமோ குணத்துடன் கலக்கும் போது அவை ஒன்றோடொன்று கூடும். இது பஞ்சீகரணம் என்று அழைக்கப்படும். இந்தப் பஞ்ச பூதங்களும் தம்முள் ஒன்றுடன் ஒன்று கூடித் தமோ குணப்பூதங்கள் உடன் கலக்கும்போது தூல பூதங்கள் உண்டாகின்றன.

தமோ குணம் கூடிய ஐம்பூதங்கள் ஒவ்வொன்றையும் இரண்டு பகுதியாக ஆக்கிப் (பாதிபாதியாக) பின்னர் அவை ஒவ்வொன்றையும் (பாதியை) நான்கு கூறாக்கி ஒரு பூதத்தின் பாதிப் பகுதியோடு மற்றைய நான்கு பூதங்களின் அரைக்கால் பங்குப் பாகத்தைக் கூட்டினால் ஒரு பங்குபூதம் (கலப்புப் பூதம்) கிடைக்கும்.

| | ஆகாயம் | வாயு | அக்னி | (அப்பு) நீர் | (பிருத்வி) பூமி |
|---|---|---|---|---|---|
| | ½ | ½ | ½ | ½ | ½ |
| வாயு | ⅛ | ஆ⅛ | ஆ⅛ | ஆ⅛ | ஆ⅛ |
| அக்னி | ⅛ | அக்⅛ | வாயு⅛ | வா⅛ | வா⅛ |
| அப்பு | ⅛ | அப்⅛ | அப்பு⅛ | அக்⅛ | அக்⅛ |
| பிருத்வி | ⅛ | பிருத்⅛ | பிருத்⅛ | பிருத்⅛ | அப்பு⅛ |
| | -------- | -------- | --------- | -------- | --------- |
| | 1 | 1 | 1 | 1 | 1 |

இப்படிப் பின்னமாக்கிக் கூடிக்கலந்த பூதங்கள் பஞ்சீகரணம் செய்யப்பட்ட பூதங்கள் என அறியப்படும் பஞ்ச திருத்தியம் (ஐவகைச்

செயல்கள் உடைய பூதங்கள்) எனப்படும்.




இப்படிக் கலந்த பூதங்கள் கண்ணிற்குப் புலப்படும் படியாகவும், உணரக் கூடியவையாகவும் செயல்படக் கூடியவையாகவும் இருக்கும். இவை தூல பூதங்கள் என்று அறியப்படும்.

முதல் ஆகாயம் அதிகம் ஆக உள்ள பூதத்தில் ஆகாயத்தினுடைய நிசகுணமான சப்தம் மட்டும் (திருசியமாக) காணக்கூடிய / உணரக்கூடிய குணமாக இருக்கும். மற்றவை (அதிருசயமாக) மறைந்து காணப்படும். ஆகாயத்தில் ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய மற்ற பூதங்களின் குணங்கள் தோன்றாது மறைந்திருக்கும். வாயுவிலே ஆகாயத்தின் குணமான சப்தமும் வாயுவின் குணமாக ஸ்பரிசமும் வெளிப்படத் தோன்றும். மற்ற பூதங்களின் குணங்கள் ஆன ரூபம், ரசம் கந்தம் மறைந்து காணப்படும்.

அக்னியிலே காரண குணங்களாகிய சப்தம் ஸ்பரிசம் ஆகியவற்றுடன் சுயகுணமான ரூபம் (ஒளி) ஆகியவை திருசியம் ஆக வெளிப்படத்தோன்றும். (அதிருசயமான) வியாப்சியம் ஆன மற்றைய அப்பு பிருத்வின் குணங்களான ரசம் கந்தம் ஆகியவை மறைந்து நிற்கும். அப்புவிலே காரண குணங்களான சப்தம், ஸ்பரிசம், ரூபம் ஆகியவற்றுடன் சுய குணமான ரசமும் கலந்து தோன்றும். பிருதவியிலே காரண குணங்களான சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம் ஆகியவற்றுடன் சுய குணமான கந்தமும் தோன்றும். பிருத்வியில் (பூமியில்) எல்லாப் பூதங்களும் தோன்றிச் செயல்படும்.

இப்படியாக, தூல பூதங்கள் ஐந்தின் தோற்றமும் அவற்றின் குணாங்களும் விவரிக்கப்பட்டன.

## நூல்

முன் சூக்ஷும பூதங்களினின்றும் சூக்ஷும சரீரங்கள் தோன்றினாற் போலப், பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூல பூதங்களினின்றும், ஆறு தத்துவமாய், நால்வகைப் பிறப்பாய், மூவகைச் சாதியாய் இருக்கின்ற ஸ்தூல சரீரங்கள் தோன்றின. இவற்றுள், ஆறு தத்துவங்களாவன :- சர்மம், உதிரம், மாமிசம், சனாயு, அத்தி, மஜ்ஜை என்னும் இவைகளாம். நால்வகைத் தோற்றங்களாவன :- சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜ்ஜம் என்னும் இவைகளாம். மூவகைச் சாதிகளாவன :- இகலோக பரலோகபுத்தி இருவகையும் கொடுக்கின்ற மனுட சரீரம் உத்தம சாதி. பரலோக புத்தியை மறைத்து, இகலோக புத்தியை மாத்திரம் கொடுக்கின்ற பசு, பக்ஷி முதலானவை மத்திம சாதி. இரண்டு லோக புத்தியையும் மறைத்திருக்கின்ற மரம், செடி, கொடி, முதலியவை அதமசாதி. இப்படிப் பிருதிவி தத்துவமாய் இருக்கின்ற பூலோகத்தில் கண்டாற்போல, அப்பு, அக்கினி, வாயு, ஆகாசம் என்னப்பட்ட தத்துவங்களாய், நிரைநிரையே இருக்கின்ற பிதிர்லோகம், தேவலோகம், யட்ச கந்தர்வ சித்தர் லோகங்களிலும், நட்சத்திரமாகத் தோன்றுகின்ற சந்திரன் முதலான பிதிர்க்கள், சூரியன் முதலான தேவதைகள், கந்தருவர் சித்தர் என்னப் பட்டவர்கள் உத்தம சாதி. காமதேனு, ஐராவதம், அன்னம், கருடன் முதலானவை மத்திம சாதி. கற்பக விருட்சம், பாரிசாதம் முதலானவை அதம சாதி. இந்தத் தூல சரீரமே அன்னமய கோசம். சூக்ஷும சரீரம் மூன்று கோசங்களாய் இருக்கும். அஃது எங்ஙனம் எனின் :- பிராண வாயுவும், கர்மேந்திரியங்களும் கூடிப் பிராணமயகோசம், மனதும், ஞானேந்திரியங்களும் கூடி மனோமய கோசம். புத்தியும் ஞானேந்திரியங்களும் கூடி விஞ்ஞானமய கோசம். காரண சரீரமே ஆனந்தமய கோசம். இப்படிப் பஞ்ச கோசம் சொல்லப்பட்டன.

## விரிவுரை

முன்னர் சூட்சும பூதங்களில் இருந்து சூட்சும சரீரம் தோன்றியதைப்போல பஞ்சீகரணம் / பஞ்சகிருத்தியம் செய்யப்பட்ட தூலபூதங்களில் இருந்து தூல சரீரம் தோன்றியது. தூல பூதங்களின்றும் தூல சரீரம் - ஆறு வகைத்தத்வங்களாகவும், நால்வகையான பிறப்புக்களாகவும் மூவகைச் சாதியுமாகவும் தூல சரீரங்கள் தோன்றின.

**ஆறு தத்வங்கள்** ( பகுப்புக்கள்) சர்மம் (தோல்) உதிரம் (ரத்தம்) மாமிசம் (சதை) சனாயு (நரம்பு) அத்தி (எலும்பு) மஞ்ஜை / மஜ்ஜை (கொழுப்பு) ஆகியவை. இவை எல்லா உயிர்கட்கும் பொதுவான பாகங்கள்.

**நால்வகைப் பிறப்பு :** சராயுஜம் (கர்ப்ப வழி) அண்டஜம் (முட்டை மூலமாக) சுவேதஜம் ( வியர்வைவழி) உத்பிஜம் (விதை வழியாக) .

| | | |
|---|---|---|
| கர்ப்பம் | = | மனிதன் / கால்நடை |
| முட்டை வழி | = | பறவைகள், மீன் முதலியன |
| வியர்வை வழி | = | கொசு / பேன் |
| விதை வழி | = | தாவர வகைகள் மரம் செடி கொடி |

| | | |
|---|---|---|
| **மூவகை ஜாதி :-** மனிதன் | மிருகம் | தாவரம் |
| (உத்தமம்) | (மத்திமம்) | அதமம். |

(இதனை ஐவகை எனவும் சொல்வார்கள். தேவர் / மனிதர் / காட்டு மிருகம் / வளர்ப்பு மிருகம் / தாவரம்)

**ஏழுவகை உயிர்கள் :**

மனிதன் - 9 (கோடி) ; தேவர் - 14 ; நடப்பன - 10 ; ஊர்வன - 11 ; நீர் வாழ்வன (நீந்துவன) - 10 ; பறப்பன - 10 ; தாவரம் - 20.

மொத்தம் 84 லெட்சம். 84 லெட்சம் வித்தியாசமான உயிர்வகைகள் (Species) என்று சொல்வார்கள்.

தேவ ஜாதிக்கு நல்வினை தீவினை என்று எதுவும் கிடையாது. அவர்கட்குச் செயல்பட வேண்டிய கட்டாயம் கிடையாது. தரப்படுகின்ற

சுகங்களை அனுபவித்துப் பின்னர் விதிக்கப்பட்ட காலம் முடிந்ததும் திரும்பவும் பிறப்பிற்கு ஆளாக்கப்படுவார்கள். மனிதன் மட்டுமே இம்மை மறுமை இரண்டிற்கும் பயன் தரக்ககூடிய செயல்களை, வினைகளைச் செய்து வீடு பேறடையக்கூடிய உயிர். எனவே மனிதப்பிறவிமட்டுமே உத்தமம் என்று கூறப்படும். மிருகம் ஐந்தறிவு உடையவை. அவற்றுக்கு இப்பிறவியில் உண்டு வாழவும் வம்ச விருத்தி செய்யவும் மட்டுமே விதிக்கப்பட்டன. எனவே மத்திமம் எனப்பட்டது. தாவரம் இரண்டு உலகத்தின் குணங்களையும் தத்துவங்களையும் மறைத்திருக்கின்ற படியால், அறியாமல் உள்ளதால் அதமம் என்று பகுக்கப்படும்.

இப்படிப் பிருத்வியின் தத்துவமாக உள்ள, பூமியில் மனிதர் / மிருகம் / தாவரம் எனக் கண்ட வீதம் - மற்ற, அப்பு, அக்னி, வாயு ஆகாயம் எனப்பட்ட நான்கு தத்துவங்களின் (பூதங்களின்) பிதிர் லோகம் (முன்னோர் உலகப்) தேவலோகம் (தேவர்களின் உலகம்) யட்கந்தர்வர் உலகம், சித்தர் உலகம் என நால் வகை உலகங்கள் உள்ளன.

| | | |
|---|---|---|
| பிதிர் லோகம் | = | அப்புவின் குணம் |
| தேவலோகம் | = | அக்னியின் குணம் |
| யட்ச கந்தர்வர் லோகம் | = | வாயு |
| சித்தர் லோகம் | = | ஆகாயம் என்று நால்வகைப்படும் |

அங்கேயும் பிதிர்கள், (முன்னோர்கள்) சூரிய சந்திரன் ஆகிய தேவதைகள் கந்தருவர் சித்தர் எனப்பட்ட உயிர்கள் உத்தம ஜாதி, காம தேனு (எல்லா வளமும் அருளும் பசு) ஐராவதம் (இந்திரனின் பட்டத்து யானை) அன்னம் ( பிரம்மாவின் வாகனம்) கருடன் (திருமாலின் வாகனம்) ரிஷபம் (சிவனின் வாகனம்) ஆகியவை மத்திம ஜாதிகளாகவும் கற்பக விருட்சம் பாரிஜாதம் ஆகிய மரங்கள் தாவரங்கள் அதம ஜாதியாவும் தோன்றின.

இந்தத் தூல சரீரத்தை - தூல உடம்பை ஐந்து வகையாகப் பிரிக்கலாம். தூல தேகத்திற்கு உருவம் கொடுக்கும் உடல் - அன்னம் பானவகைகளால் (உணவு நீர் வகைகள்) ஆக்கப்பட்டது. இது **அன்னமய கோசம்** எனப்படும். சூட்சும உடம்பில் இயங்கும் மூன்று சக்திகள் / பிரிவுகள்.

**பிராணமய கோசம்** - நாம் உயிருடன் இருப்பதற்கு உதவுவது. உள்ளுறையும் பிரிவு. சர்மேந்திரியங்கள், வாயுக்கள் கூடியவை.

**மனோ மய கோசம் :** மனத்தின் இயக்கத்தால் உள்ள பிரிவு இதற்கு அந்தக் கரணங்களில் மனமும் ஞானேந்திரியங்கள் கூடி இயங்கக்கூடியது.

**விஞ்ஞானமும் கோளும் :** புத்தியும் ஞானேந்திரியங்களும் கூடி இயங்கக்கூடிய பிரிவு

**ஆனந்தமய கோசம் :** இது சூட்சும உடம்பையும் தாண்டி உள்ளது. ஆனந்த மய கோசம் காரண உடம்பே. இறைப் பொருளுடன் தொடர்புள்ளது. ஆனந்தமயகோசம் இப்படியாகத்தூல உடம்பின் தோற்றம் உரைக்கப்பட்டது.

*தொடரும்....*

## மடாலய நிகழ்வுகள்

15.2.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் 5 ஆம் ஆண்டு விளையாட்டு விழா நடைபெற்றது. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் விளையாட்டுப் போட்டிகளைத் தொடங்கி வைத்தார்கள். கந்தர்வகோட்டை அரசு பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் பேராசிரியர் P.இரவி சிறப்புவிருந்தினராகக் கலந்து கொண்டு மாணவர்களுக்குப் பரிசுகளை வழங்கினார்.

19.2.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் முதலாம் ஆண்டு விளையாட்டுவிழா நடைபெற்றது. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் விழாவினைத் தொடங்கி வைத்தார்கள். கல்லூரி முதல்வர் டாக்டர் சே. குமரப்பன் தலைமை ஏற்றார். பேராசிரியர் ம. கார்மேகம் வரவேற்புரை நிகழ்த்தினார். போட்டிகளின் நிறைவில் பேராசிரியர் M. சீதாலெட்சுமி நன்றி கூறினார். பேராசிரியப் பெருமக்களும் பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் மற்றும் துணைமுதல்வர் ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டனர். உடற்கல்வி இயக்குநர் திரு சசிகுமார், திருபாலா ஆகியோரும் உடற்கல்விக் கல்லூரி மாணவர்களும் போட்டிகளை மிகச் சிறப்பாக நடத்திக் கொடுத்தனர்.

22.2.2014 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளியின் நான்காம் ஆண்டு விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்றன. கோவிலூர் ஆதீனம் சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் விழாவில் முன்னிலை வகித்தார்கள். தமிழ்நாடு உடற்கல்விப் பல்கலைக்கழக மேனாள் துணை வேந்தர் டாக்டர் கே.வைத்தியநாதன் விளையாட்டுப் போட்டிகளைத் தொடங்கி வைத்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழகக் கல்விப்புலத் தலைவர் டாக்டர் இரவீந்திரன் விளையாட்டுப் போட்டிகளில் வெற்றிபெற்ற மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கிச் சிறப்பித்தார்.

23.2.2014 முற்பகல் இலக்கியப் பூங்கா நிகழ்வில் இராமசாமி தமிழ்க் கல்லூரியின் மேனாள் முதல்வர் முனைவர் நா. வள்ளி மெய்ப்பொருள் நாயனார் பற்றிச் சொற்பொழிவாற்றினார். ஆர்வலர்கள் பலர் கலந்து கொண்டு பயன்பெற்றனர்.

15.2.2014 அன்று காளையார்கோவில் இராமநாதன் செட்டியார் குருபூஜையும் 20.2.2014 அன்று காரைக்குடி ஸ்ரீமத் சோமசுந்தர்

குருபூஜையும் 25.2.2014 அன்று நல்லூர் பழனிமுருகன் அய்யா குருபூஜையும் மிகச் சிறப்பாக நடந்தன.

25.2.2014 அன்று ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் பிரைமரி மற்றும் நர்சரி பள்ளியின் விளையாட்டு விழா நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் விளையாட்டு விழாவினைத் தொடங்கி வைத்தார்கள். காரைக்குடி வட்டாட்சியர் திரு A.இளங்கோவன் விளையாட்டுப் போட்டிகளில் வெற்றிபெற்ற மாணவர்களுக்குப் பரிசுகளை வழங்கிச் சிறப்பித்தார்.

1.3.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் 5 ஆம் ஆண்டுவிழா சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. தொழில் நுட்பக் கல்வித்துறைக் கூடுதல் இயக்குனர் (பாலிடெக்னிக்) முனைவர் K. சுந்தரமூர்த்தி விழாவில் சிறப்புரை வழங்கினார். துணைமுதல்வர் திரு N.நடராஜன் அனைவரையும் வரவேற்றார். கல்லூரி முதல்வர் திரு D.ஜெயசீலன் ஆண்டறிக்கை வாசித்தளித்தார். மூன்றாம் ஆண்டு மின்னணுவியல்துறை மாணவன் செல்வன் S. சண்முகநாதசாமி நன்றி கூறினார். தொடர்ந்து மாணவர் கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன.

6.3.2014 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளியின் ஆண்டுவிழா கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. காரைக்குடி தொழிற்கல்வி மற்றும் மேலாண்மை நிறுவனத்தின் பேராசிரியர் டாக்டர் எஸ்.வி. அண்ணாமலை சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு மாணவர்களுக்குப் பரிசுகளை வழங்கிச் சிறப்பித்தார். பள்ளியின் துணை முதல்வர் வள்ளியம்மை வரவேற்புரை வழங்கினார். முதல்வர் மணிமொழி மோகன் ஆண்டறிக்கை வாசித்தார். ஆசிரியை சமது பெளசியா நன்றி கூறினார்.

7.3.2014 அன்று மாலை 4.30 மணிஅளவில் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப் பள்ளியின் 19 ஆவது ஆண்டுவிழா நிகழ்ந்தது. கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் தலைமை ஏற்று ஆசியுரை வழங்கினார்கள். ஆசிரியை திருமதி பத்மா வரவேற்புரை ஆற்றினார். தலைமை ஆசிரியை திருமதி மணிமொழி ஆண்டறிக்கை வாசித்தார். குமாரராணி மீனாமுத்தையா தாய் சேய் நலம் மற்றும் பொதுநல மருத்துவமனையின் டாக்டர் முத்துசாமி அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். டாக்டர் இந்திரலேகா முத்துசாமி பள்ளி மாணவ மாணவியர்க்குப் பரிசுகள் வழங்கிச் சிறப்பித்தார். மாணவியரின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. ஆசிரியை திருமதி கௌரி நன்றி கூறினார். ஏராளமான பெற்றோர்களும் மடாலயக் கல்வி நிறுவன ஆசிரியர்கள், அலுவலர்களும் விழாவில் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

15.3.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் முதலாம் ஆண்டுக் கல்லூரி நாள் விழா நடைபெற்றது. கல்லூரி முதல்வர் டாக்டர். சே. குமரப்பன் ஆண்டறிக்கை வாசித்தார். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையுரையும் ஆசியுரையும் வழங்கினார்கள். முன்னதாக ஆங்கிலத்துறைத் தலைவர் பேராசிரியர் வி. பாலசந்திரன் அனைவரையும் வரவேற்றார். அழகப்பா பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினரும் தொழில் வேதியியல் துறைத் தலைவருமான டாக்டர். P.மணிசங்கர் விழாப் பேருரை ஆற்றி மாணவர்களுக்குப் பரிசுகளை வழங்கினார். கணினிஇயல் துறைத் தலைவர் திருமதி. K.கலா நன்றி கூறினார். பின்னர் மாணவர்களின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. கல்லூரி பற்றிய ஒளிக்காட்சி காட்டப்பெற்றது.

## சேக்கிழார் போற்றும் பெண்ணின் பெருமை
## சாதாரணமாக எல்லோர்க்கும் ஏற்படும் ஐயங்கள்

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

### திருநீலகண்ட நாயனார் மனைவி

முதலில் நாயனார் வரலாற்றைச் சுருக்கமாக அறிந்தபின் விரிவாக மனைவியாரின் பங்கைப் பற்றிச் சிந்திக்கலாமே !

திருநீலகண்டம் என்ற நாமத்தை மந்திரமாக உச்சரித்த காரணத்தால் திருநீலகண்டர் என்று பெயர்பெற்ற வேட்கோவர் (குயவர்) தில்லையில் தோன்றி இறைத் தொண்டு செய்தவர். சிவன்பால் கொண்ட நேயத்தோடு இளமை காரணமாக மகளிர்பாலும் ஈடுபாடு கொண்டவர். அழகிலும் குணத்திலும் கற்பிலும் சிறந்த மனையாள் இருந்தும் பரத்தையர் நாட்டமும் இருந்தது. இதனை அறிந்த நாயகியார் தன்மான மிகுதியால் கணவர் தொடவந்தக்கால் எம்மைத் தொடுவீராயின் திருநீலகண்டம் என்று தடுக்க நாயனார் பெண் இனத்தையே மனதாலும் தொடுவதில்லை என்று சபதமேற்று நிற்கிறார். இளமை அழிந்து வடிவுறு மூப்பும் வந்தது. ஈசன் சோதனையும் வந்தது. ஈசன் கொடுத்து வைத்த மண்பாண்டம் மறைந்து போக நாயனார் ஊர் நடுவர் மன்றத்தில் நிறுத்தப்பட்டு - தண்டனையாக மனையாள் கரம் பற்றி, குளம் மூழ்கி சத்தியம் செய்யச் சொல்லப்படுகிறார். உடன்படவும் இயலாமல் மீறவும் இயலாமல் - சபதத்தை வெளிப்படுத்தி - மூங்கில் தண்டினை இருவரும் இருபுறம் பற்றி மூழ்கிப் பழைய இளமையோடு எழுகிறார்கள். அவர்களை அதே இளமையோடு தன்னுடன் தன்னடிக்கீழ் வாழ அருள்செய்து வாழ்த்துகிறார். - இதுதான் வரலாறு.

இது நடந்து ஏறத்தாழ பதின்மூன்று பதினான்கு நூற்றாண்டுகட்கு முன்னர். அது சமயம் பரத்தையர் தொடர்பு சாதாரண நிகழ்வு.

உலோகங்கள் புழக்கத்தில் இல்லாத அக்காலத்தில் மண்தான் பாண்டம் செய்யவும் கலைப்பொருட்கள் செய்யவும் பயன்பட்டிருக்க வேண்டும். எனவே குயவரிற் சிறந்தவரான நீலகண்டர் செல்வந்தராகவும் செல்வாக்குள்ளவராகவும் இருந்திருக்க வேண்டும். அவர் இளமை மீதூரப் பரத்தையை நாடுதல் இயல்பே !

ஆனால் இதனை நாயகியார் பொறுக்கவில்லை. ஏன் ? தன்னிடம் எது இல்லை ? ஏன் இவர் பிற மாதரை நாடவேண்டும் என்ற தன்மான உணர்வு மட்டுமா நாயகி திருநீலகண்டர் பெயரைச் சொல்லித் தடைபோட வைத்தது. சிந்தித்துப் பார்த்தால் நாயனாரிடம் கொண்ட அன்பும் பச்சாதாபமும் மிகுந்ததனாலேயே தடைவிதித்தார் என்று எண்ணத் தோன்றுகிறது. இறைவன் பால் அளவிடற்கரிய அன்பும் இறைத் தொண்டைத் தன் உயிர்க்கும் மேலான குறிக்கோளாக, கடமையாகக் கொண்ட தன் கணவர் இப்படிச் சிற்றின்ப ஆசையாலே சஞ்சலப்படுவாரே ஆயின் தடம் மாறிப் போவாரே இதனை நான் அனுமதிக்கலாமா ? என்கிற கவலை தான் அவரைத் தன் கணவர் உயிர் மந்திரமாகக் கொண்ட திருநீலகண்டம் பெயராலே தடையிட வைக்கிறது. இவர் போட்ட ஆணையால் தான் நாயனார் திசைமாறிப் போகாமல் திடமாகித் தன் தொழிலிலும் தொண்டிலும் வைராக்யமாக நின்று இறைஅருளைப்பெற முடிந்தது.

திருநீலகண்டரைப் பொய் கடிந்து அறத்தின் வாழ்வார் என்று அறிமுகம் செய்கிற சேக்கிழார், அவர் தம் இல்லறத்தை வையகம் போற்றும் செய்கை மனை அறம் புரிந்தார் என்கிறார். நாயகியை தேன் அலர் கமலப் போதின் திருவினும் உருவம் மிக்கார், அருந்ததிக் கற்பின் மிக்கார் என்கிறார்.

எனவே அவர்கள் உண்மையான மன இணக்கம் கொண்ட நல்வாழ்வு பொய்மையில்லாத புனித வாழ்வு வாழ்ந்தவர்கள்.

வையகம் போற்ற இல்லறம் நடத்திய இவர்கள் நடுவே சிக்கல் ஏன் வந்தது. பரத்தையை நாடியது மட்டுமா ? இல்லை.

தம்முடைய வாழ்வின் குறிக்கோளாக, நெறியாகக் கொண்ட இறைத்தொண்டை மறந்து, தன்னையும் ஒதுக்கி நாயனார் புறம் போனது நாயகிக்கு மானப்பிரச்சனை மட்டும் அல்ல ; கொள்கைக்கு ஊறு விளைவிக்கும் பிரச்சனையும் கூட. எனவேதான் எவளையோ தொட்ட கையால் என்னைத் தொடாதீர் என்று சொல்லாது கணவரின் உயிர்நிலை மந்திரமான திருநீலகண்டத்தின் பெயரால் தீண்டுவீர் ஆயின் எம்மைத திருநீலகண்டம் என்று நறுக்குத்தெறிக்கத் தடை போடுகிறார். நாயனாரும் தன் தவறை, பிற மாதர் நாட்டத் தவறை அல்ல - கொள்கைத் தடம் மாறிய தவறை உணர்ந்து தான் மனத்தினும் தீண்டேன் என்று பிராயச்சித்தம் தேடுகிறார். இவ்வாறு நாயகிதான் நாயனாரைக் கொள்கையிலே பிடிப்பூன்றி நிற்கச்செய்கிறார். இறைவனும் சீலமார் கொள்கை என்றும் திருந்து வேட்கோவர் தம்பால் வலிது ஆம் நிலைமை நாட்ட வருகிறார். வேட்கோவரின் கொள்கை வலிது என்றால் இதற்கு மூல காரணம் நாயகி அல்லவா ? நாயகியின் தடை, இளமை துறந்த பக்குவம் இரண்டும் தானே காரணங்கள்.

தான் நெறியுடன் வாழ்ந்தால் மட்டும் போதாது; தன்னைச் சார்ந்தவரையும் நெறிப்படுத்துதல் அல்லவா நாம் கொண்ட கொள்கைக்கு அழகு! அதனைச் செய்தவர் நாயகிதானே!

எனவே நாயனார் பெருமையில் பாதி நாயகிக்குச் சேர வேண்டும். நாயகியும் நாயனார்க்கீடே!

*தொடரும்...*

# மகாத்மா காந்தி படம்

## ஏ.கே. செட்டியார் (1911 - 983)

தெய்வத்திரு. அ. கருப்பஞ்செட்டியார் கோட்டையூரில் பிறந்த நகரத்தார். மிகச் சிறந்த எழுத்தாளர், பயணக் கட்டுரையாளர், தேச பக்தர், பத்திரிக்கையாளர், திரைப்படத் தயாரிப்பாளர் என்று பன்முகத் திறமை கொண்ட மாமனிதர். தனி மனிதனாகச் சொந்தப் பணத்தைச் செலவழித்து மகாத்மா காந்தி அவர்கள் பற்றிய வரலாற்றை முழு நீள ஆவணப் படமாக எடுத்து வெளியிட்ட பெருந்தகை. 40 ஆண்டுக் காலத்திற்கு மேலாக "குமரி மலர்" என்ற இலக்கிய இதழைத் தள்ளாத வயதிலும் தளராது நடத்திய பேராண்மையாளர் (1943 - 1983). அவர் காந்தி மகான் திரைப் படத்திற்காகச் செய்த தியாகங்கள் அளவு கடந்தவை. காந்தி மகான் வரலாற்றைத் தான் எடுத்த அனுபவத்தைக் கட்டுரையாக எழுதியுள்ளார். அதனைக் கீழே தருகிறேன்.

1937-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் இரண்டாந்தேதி, நியூயார்க்கிலிருந்து டப்ளினுக்கு (அயர்லாந்து) "சமரியா" என்னும் கப்பலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். அந்தத் தினம் இந்தியாவிலுள்ள சிறு குழந்தைக்கும் தெரிந்த புனித தினம் - மகாத்மாவின் பிறந்த நாள்.

நியூயார்க்கில் காந்தி ஜெயந்தியைக் கொண்டாட, இந்தியாவின் நண்பர்கள் ஏற்பாடு செய்திருந்தனர். ஆனால், அதில் கலந்து கொள்ளத் தக்கவாறு தாமதித்து வரக்கூடிய நிலையில் நான் அன்று இல்லை. கப்பலில் அதை எண்ணி நான் வருந்திக்கொண்டிருக்கும் போது ஒரு எண்ணம் உதித்தது. கடலிலேயே நான் ஏன் அதைக் கொண்டாடக் கூடாது? என்னோடு கப்பலில் இருந்த ஒரே இந்தியர், அவ்வெண்ணத்தை ஆமோதித்தவுடன் அதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினேன்.

கூட இருந்த சில அமெரிக்க நண்பர்கள், அதில் கலந்து கொள்ள

முன் வந்தனர். இந்திய உணவுடன் அச்சிறு கொண்டாட்டம் வெற்றிகரமாகவும், சந்தோஷமாகவும் நடந்தது. விருந்து முடிந்ததும் கப்பலின் மேல் தளத்திற்கு வந்தேன். அச்சம்பவத்திற்குக் காரணமாக இருந்த அந்த ஆத்மாவுக்கு நம் தேசம் எவ்வளவு கடமைப் பட்டிருக்கிறது என்பதை எண்ணி உருகிக்கொண்டிருந்த போதுதான், இப்படத்தைப் பற்றிய எண்ணம் முதன் முதலாக எனக்கு உதித்தது. மகாத்மாவின் வாழ்க்கையை, அவருடைய வாழ்க்கையின் அனுபவங்களை, ஒரு உண்மையான சரித்திரப்படமாக ஏன் தயாரிக்கலாகாது என்ற எண்ணம் இரவு முழுவதும் என்னை ஆட்கொண்டது.

காலையில் எழுந்தவுடன், இந்திய நண்பரிடம் ஓடி, என் எண்ணத்தைத் தெரிவித்தேன். அவர் சிரித்தார். ஆனால் என் ஆர்வத்தை உணர்ந்து அந்தத் திட்டத்தைப் பற்றி விவாதிக்கச் சம்மதித்தார். நீண்ட நேரம் விவாதித்து ஒரு திட்டம் தயாரித்தோம். அச்சிறு காகிதம்தான் காந்தி சரித்திரப் படத்தின் மூலாதாரம்.

அத்திட்டம் ஒரு உருவெடுத்ததும், என் நண்பருக்குச் சிறிது நம்பிக்கை ஏற்பட்டது. எண்ணம் நல்லது தான் என்று ஒப்புக் கொண்டார். காந்திஜியைப் பற்றி ஒரு சிறு படம் தயாரிப்பது சாத்யமாகலாம். ஆனால் ஒரு முழு நீளப்படம் தயாரிக்க வேண்டுமே? அதற்கு வேண்டிய விஷயங்களை ஒருவர் சேகரிக்க வேண்டுமே? சாத்யமா? என்றார்.

நான் சொன்னேன் : "உலக முழுமையும் அதற்காக அலைவேன். ஒவ்வொரு செய்திப் படக் கம்பெனிக்கும் செல்வேன். உலகத்தின் பல்வேறு பாகங்களிலுள்ள படக் குவியல்களில் தேடுவேன். சினிமாப்பட லைப்ரரிகள் ஒன்று தவறாமல் பார்ப்பேன். எப்படியும் சேகரிப்பேன்".

ஆனால், அவர் நம்பிக்கை கொள்ளவில்லை.

ஐரோப்பா முழுதும் அலைந்தேன். திரும்பியதும், ஹரிபுரா

காங்கிரஸுக்குச் சென்றேன். இந்தியாவில் உள்ள பல்வேறு ஸ்டுடியோக்களைப் பார்வையிட்டேன். அநேக பட முதலாளிகளுடன் என் திட்டம்பற்றி விவரித்தேன் பலனில்லை.

இதன் நடுவில் இந்தியாவின் தலை சிறந்த ஸ்டுடியோ ஒன்றில், தாங்கள் ஆரம்பிக்கவிருந்த செய்திப்பட இலாகாவிற்கு என்னைத் தலைவராக அழைத்தனர். அதை எண்ணிச் சிலகாலம் தாமதித்தேன். ஆனால் அவர்கள் செய்திப்படம் ஆரம்பிக்கும் எண்ணத்தைக் கைவிட்டதும், என் பழைய வேலையைத் தொடங்கினேன்.

சென்னையிலுள்ள பல முதலாளிகள் எனது திட்டத்தைப் பார்த்து நகைத்தனர். சிலரால் அதனை அறிந்து கொள்ளக்கூட முடியவில்லை. ஒரு பிரபல பிலிம் கம்பெனி மானேஜர், என் எதிரிலேயே தன் முதலாளியிடம், "வாழ்க்கைச் சித்திரப்படம் (டாக்குமெண்டரி ப்லிம்) இலவசமாகக் காண்பித்தால் கூட ஜனங்கள் பார்க்க வரமாட்டார்கள்" என்று கூறினார்.

பலர் நான் வெறும் மனக்கோட்டை கட்டும் இளைஞன் என்றும், வெளிநாட்டிலிருந்து திரும்பி இருப்பதால், சாத்யமாகாத எண்ணங்களை வைத்துக் கொண்டு குழம்பிக்கொண்டிருப்பதாயும் எண்ணினர். இதன் நடுவில் சில முதலாளிகள், தங்கள் படத்திற்கு டைரக்டராக வரும்படி கொழுத்த சம்பளத்தை ஆசை காட்டினர். தொகை ரொம்ப வசீகரமாக இருந்தது. ஆனால் நான் எடுத்த காரியத்தை விடுவதில்லை என்று சங்கற்பம் செய்து கொண்டேன்.

அதன்பிறகுதான் 'டாக்குமெண்டரி பிலிம்ஸ்' ஸ்தாபிக்கப்பட்டது. அக்கம்பெனி உருவாக ஏறக்குறைய ஒரு வருஷம் சென்றது. அதற்கிடையில் தமிழ்ப்பட முதலாளிகளைப்பற்றி அறிய நல்ல அனுபவமும் கிடைத்தது. நான் என் எண்ணத்தில் பைத்தியம் பிடித்தவன் போல் இருந்தேன்.

இந்தியாவைச் சுற்றிப் பல தடவைகள் அலைந்தேன். உலகத்தில் ஏறக்குறையப் பாதிக்கு மேல், வேகமான கப்பல்களிலும், ஆகாய விமானங்களிலும் ஐந்து மாதங்கள் சுற்றினேன்.

பழைய படங்களைச் சேகரிப்பது, விசேஷமாக இந்தியாவில் மிகவும் ரசமாக இருந்தது. ஸ்டுடியோக்களுக்குச் சென்று பழைய படங்களைப் பற்றி விசாரிக்கும் போது அநேகர் என்னை மிகுந்த ஆச்சரியத்துடன் உற்று நோக்கினர் : இந்தக் குப்பைகளை என்ன செய்யப்போகிறாய் என்று கேட்டனர். ஆனால் நான் மிகவும் அபூர்வமான சிலவற்றை அந்தக் குப்பைகளிலிருந்து தேடி எடுத்தேன் !

முதல் ஆண்டு முழுவதும் தேடிச் சேகரித்த படங்கள், முழு நீளப்படமாகச் செய்வதற்குப் போதுமானதாக இல்லை. பிறகு ஐரோப்பாவிற்குப் பயணமானேன்.

ஐக்கிய அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் முப்பதுக்கு மேற்பட்ட செய்திப் படக் கம்பெனிகட்குச் சென்றேன். கீழ் நாடுகளிலும் மேல் நாடுகளிலும் காந்திஜியின் வாழ்க்கைக்கு உபயோகமான, எல்லாப் படங்களையும் சேகரித்தேன். வெளிநாடுகளில் படங்கள் சேகரிப்பது இந்தியாவைவிடச் சுலபாகவும் சிக்கனமாகவும் இருந்தது.

பெரும்பாலான நாடுகளில் செய்திப் படக் கம்பெனிகளும், பட லைப்ரரிகளும் இருக்கின்றன. அவர்கள் சில நிமிஷங்களில் தங்கள் படஜாபிதாவைப் பார்த்து நமக்குத் தேவையானவை உண்டு, இல்லை என்று சொல்லிவிடுகின்றனர். அநேக இடங்களில் என் வேலை, நான் சென்ற 24-மணிக்குள் முடிந்துவிட்டது.

லண்டனுக்குச் சென்றபொழுது மகாத்மாவின் நண்பர் ஸ்ரீ போலக்கைப் பார்க்கச் சென்றேன். என்னுடைய திட்டத்தை அவருக்கு விளக்கிக் கூறியபொழுது, அவர் சாவதானமாக ஒரு பழைய தகரடப்பாவை எடுத்து, 200 அடி கொண்ட மிகப் பழைய சினிமாப் படம் ஒன்றின் 'பாசிட்டிவ்' காப்பியைக் காண்பித்தார் ! அது ஒரு சரித்திரப்

பிரசித்தி பெற்ற படம் என்றும், சென்ற 27 வருஷங்களாய் அதனைத் தாம் பாதுகாத்து வருவதாயும் அவர் சொன்னார். அதற்கு ஒரு காப்பி எடுத்துத் திரையில் போட்டுப் பார்த்தபொழுது, "இது காலஞ் சென்ற அருந்தலைவர் கோபாலகிருஷ்ண கோகலே தென்னாப்பிரிக்கா விஜயம் செய்தபோது எடுத்த படம். அதில் மகாத்மா காந்தியை ஐரோப்பிய உடையில் பார் !" என்று ஸ்ரீ போலக் கூறினார். நமது தேசத்தின் அருமையான சரித்திரச் சின்னங்களில் இது ஒன்று என்று துணிந்து கூறலாம். 1912-ஆம் வருஷத்தில், முன்னேற்றம் அதிகமடையாத ஆப்பிரிக்காக் கண்டத்தில், அதுவும் காந்திஜியையும் கோகலேயையும் சினிமாப் படம் எடுத்திருப்பார்கள் என்று யாராவது எதிர்பார்த்திருக்க முடியுமா ? அதைவிடப் பெரிய பாக்கியம் ஸ்ரீ போலக் அதைக் காப்பாற்றி வைத்திருந்து அளித்ததுதான். காந்திஜியின் தென்னாப்பிரிக்காப் போராட்டத்தில் அவருடன் தோளோடு தோள் கொடுத்து நின்ற அதே ஸ்ரீ போலக்தான் இவர். இவ்வருந்தனத்தைக் காப்பாற்றி இந்தியருக்கு அளித்த ஸ்ரீ போலக்குக்கு நாம் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறோம்.

பொதுவாக இங்கிலாந்தைப் பொறுத்தவரையில், பிரிட்டிஷ் செய்திப் படக் கம்பெனிகளிடமிருந்து எந்த விதமான ஒத்துழைப்பையும் நான் பெற முடியவில்லை. ஒரு செய்திப் படக்கம்பெனியில் ஒரு அடிக்கு ஒரு பவுன் கேட்டார்கள்! அந்த அதிக விலைக்கு நான் வாங்கத் தயாராய் இருந்தபொழுது, அந்தப் படத்தை விற்க மறுத்துவிட்டனர். காந்திஜியின் லண்டன் விஜயம் அரசியல் சம்பந்தமான படமென்றும், அப்படத்தை நான் இந்தியாவுக்கு எடுத்துச் சென்று, பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு விரோதமாகக் காட்டக்கூடும் என்றும், எனவே எவ்வளவு விலை கொடுத்தாலும், அப்படங்களை எனக்கு விற்க முடியாதென்றும் கூறிவிட்டனர். அந்தப் படங்களில் சில பாகங்களை வெளிநாடுகளில் நான் அலைந்து வாங்க வேண்டியதாயிற்று.

பிரான்ஸில் உள்ள படக்கம்பெனிகள் முழு மனதுடன் உதவி செய்தன. அவைகளுள் விசேஷமாக "எக்லார் டிராஸ்" என்ற செய்திப் படக்கம்பெனியின் ஒத்துழைப்பு எனக்கு மிகவும் பயனுள்ளதாக இருந்தது. எனது பிரயாணத்தில் மிகவும் சந்தோஷமான நாட்கள், உலகப் பிரசித்திபெற்ற எழுத்தாளரான ஸ்ரீ ரொமெய்ன் ரோலந்துடன் தங்கிய நாட்களாகும். பிரான்ஸில் அவர் பிறந்த இடமான வெஸிலேயில் அவர் வருஷத்தில் 6 மாதம் கழிக்கிறார். ரொமெய்ன் ரோலந்திற்கு ஆங்கிலம் தெரியாது. ஆதலால் அவர் மனைவியார் மூலமாகவே தான் பேச முடிந்தது.

மகாத்மாஜியின் சரித்திரத்தை முதன்முதலாக எழுதி வெளி உலகத்துக்கு அறிவித்த பெரியவர் ஸ்ரீ ரொமெய்ன் ரோலந்துதான். சினிமாவில், தமது அபிப்பிராயத்தைச் சொல்ல அவர் முதலில் மறுத்துவிட்டார். அவர் மறுத்த காரணம் சினிமாவுக்குத் தகுந்த முகவெட்டு, தமக்கு இல்லை என்று அவர் எண்ணியதேயாகும் ! கடைசியாக அவர் மனைவியின் உதவியைக் கொண்டு, மிகுந்த சிரமத்தின் பேரில் அவர் சம்மதத்தைப் பெற்றேன். உடனே பிரான்ஸில் பிரபல செய்திப் படக் காமிராக்காரரான சார்லஸ் மேத்தானுக்கு டெலிபோன் செய்து அவரை வரவழைத்தேன். மறுநாள் காலை மகாத்மாஜியைப் பற்றி ஸ்ரீ ரொமெய்ன் ரோலந்தின் அபிப்பிராயத்தைப் படத்தில் பிடித்தாகிவிட்டது.

பல ஐரோப்பிய நாடுகளில் காந்திஜி பற்றிய செய்திப் படங்களைத் தேடி முடிந்தவுடன், அமெரிக்காவுக்கு "பில்ஸுத்ஸ்கி" என்ற போலிஷ் கப்பலில் பிரயாணமானேன். இந்தப் போலந்துக் கப்பல்தான் யுத்த ஆரம்பத்தில் விரோதிகளால் மூழ்கடிக்கப்பட்டது.

நியூயார்க்கில், எனது பழைய நண்பர்கள் மலர்ந்த முகத்துடன் வரவேற்றனர். அந்த நகரத்துக்கு எனது இரண்டாவது விஜயம் மிகச் சுருக்கமாகவே இருந்தது. பல செய்திப் படக்கம்பெனிகள் என்னுடன்

ஒத்துழைக்க முன் வந்தன. நியூயார்க் பப்ளிக் லைப்பரரியைச் சேர்ந்த ஸ்ரீ பிரிஹாவர், காந்திஜியைப்பற்றிய பல்வேறு ஐரோப்பிய பாஷைகளிலுள்ள சுமார் 200 புஸ்தகங்களைச் சேகரிக்க மிகுந்த சிரமம் எடுத்துக்கொண்டார். ஒரு சிறந்த அமெரிக்கக் காமிராக்காரரைக் கொண்டு இந்த அருமையான பொக்கிஷத்தைப் படம் பிடித்துக் கொண்டேன். வாஷிங்டனிலுள்ள காங்கிரஸ் புத்தக சாலையிலும், காந்திஜியைப் பற்றி உள்ள ஏராளமான புஸ்தகங்களைப் படம் பிடிக்க உதவி செய்தனர்.

அமெரிக்காவை விட்டு நான் உடனே புறப்பட வேண்டியதாயிற்று. சிறிதுகூட எனக்குச் சாவகாசம் இல்லாததால், வாஷிங்டன் ரேடியோ நிலையத்தார், "மகாத்மா காந்தி" சினிமாப் படத்தைப் பற்றி, என்னைப் பேசுமாறு கேட்டுக் கொண்டதைக் கூட நான் மறுக்க வேண்டியதாயிற்று. அபூர்வமான உலகப் பொருட்காட்சியைக் கூட 7 மணி நேரந்தான் பார்க்க அவகாசமிருந்தது.

அமெரிக்காவிலிருந்து "பிரிமென்" என்ற பிரம்மாண்டமான ஜெர்மன் கப்பல், என்னை இங்கிலாந்தில் சவுத்தாம்ப்டனில் கொண்டுவந்து சேர்த்தது. அடுத்த வேலை தென் ஆப்பிரிக்காவில், ஆனால் இங்கிலாந்தைவிட்டுத் தென் ஆப்பிரிக்காவிற்குப் புறப்படுவது மிகவும் சிரமசாத்தியமான காரியமாயிற்று. இங்கிலாந்தை விட்டுத் தென் ஆப்பிரிக்காவிற்குப் புறப்படும் ஒவ்வொரு கப்பலிலும் இந்தியருக்கென்றால் இடமில்லாதிருந்தது. இடமேயில்லை என்று சொல்லப்பட்ட ஒரு கப்பலில் மிகுந்த சிரமத்தின் பேரில் இடம் சம்பாதித்தேன். ஆனால் அக்கப்பலில் நான் கண்ட காட்சி ஆச்சரியத்தை அளித்தது ! மொத்தம் அக்கப்பலிலேயே நாங்கள் 61 பிரயாணிகள்தான் இருந்தோம். "விண்ட்சர் காசில்" என்ற அந்தக் கப்பல் 20,000 டன் உள்ள பெரிய கப்பல். அக்கப்பலில் உள்ள சாப்பிடுமிடத்தில் ஒரே சமயத்தில் 200 பேர் சாப்பிடலாம். ஆனால் நான் மட்டும் தனியாக உட்கார வைக்கப்பட்டேன். மற்ற 60 பிரயாணிகளும் வேறு பாகத்தில்

உட்கார்ந்து கொண்டனர். அந்தத் தனித்த இடம் எனக்குக் கௌரவம் அல்ல. அது ஒரு அவமதிப்பு !

ஓரிரு நாட்களல்ல, 13½ நாட்கள் இத்தகைய அவமதிப்புகளுக்கு நான் ஆளாக வேண்டியதாயிற்று. கடைசியாக கேப்டவுனை அடைந்தும்கூட இந்த அவமதிப்புகள் என்னை விடவில்லை. அங்குள்ள ரயில்வே அதிகாரிகள் ரயில் வண்டியில் தனித்த இடந்தான் அளிக்க முடியுமென்றும் அங்கேயே நான் உணவை உட்கொள்ள வேண்டுமென்றும் கூறினர் ! கேப்டவுனில் ஆகாய விமான நிலையத்திற்கு டெலிபோன் செய்தேன். அதிர்ஷ்டவசமாக அரைமணி நேரத்தில் புறப்பட இருக்கும் ஒரு ஆகாய விமானத்தில் இடம் காலியிருப்பதாக அறிவித்தார்கள். விரைந்து சென்று அதில் ஏறிக்கொண்டேன். கேப் டவுனிலிருந்து 1200 மைல்கள் தூரமுள்ள டர்பன் நகரைச் சுமார் 7 மணி நேரத்தில் அடைந்தேன்.

தென்ஆப்பிரிக்கா, நிறத் திமிர் நிறைந்த நாடு, இன்று கூட டர்பன் நகரில் உள்ள சில வீதிகளில் இந்தியர்கள் நடந்து செல்வதற்கு அனுமதிக்கப்படுவதில்லை. ட்ராம், பஸ்களிலும் ஐரோப்பியர் அல்லாதவர்களுக்காகக் கடைசி மூன்று ஆசனங்கள் ஒதுக்கப் பட்டிருக்கின்றன. சில பஸ்களில் இந்தியர்களையும், நீக்ரோக்களையும் ஆடுமாடுகளைப் போல் அடைக்கிறார்கள்! பாங்குகளில் இவர்களுக் கெனத் தனி ஜன்னல்கள்! தனி தபால் ஆபீஸ்களும் இருக்கின்றன ! அநேக சினிமாக் கொட்டகைகளில், ஹோட்டல்களில், காபி சாப்பிடுகிற இடங்களில், இந்தியர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. ஜோகன்னஸ்பர்க் நகரில் உள்ள ஒரு சிறு கடைக்குச் சென்று, நான் சோடா கேட்டபொழுது, அங்குள்ள பெண், “புட்டியில் தருவதற்கு ஒன்றுமில்லை” என்று சொன்னாள் ! இந்த நாட்டில் தான் மகாத்மா காந்தி இருபது வருஷ காலத்திற்கு மேலாகத் தங்கி, இவ்வித அநியாயங்களை ஒழிக்க அநேக போராட்டங்களை நடத்தினார்.

*தொடரும்...*

# கோயிலூர்ப் புராணம்

பாயிரம்

## வன்னி விநாயகர்

சீர்பூத்த மெய்யறிவு இன்புருஎனற்கு ஓர் குறியீடு தெரித்தல் ஏய்ப்பக்
கார்பூத்த விருகஉருத் தெய்வஉருப் பூதஉரு கலப்பத் தோன்றித்
தார்பூத்த நசையாலும் தாம்கொடுத்த வரத்தாலும் தணவா(து) என்றும்
ஏர்பூத்த சமிநிழல்வாழ் வன்னிநா யகர்மலர்த்தாள் இறைஞ்சி வாழ்வாம்.
1

## கொற்றவாளீசர்

மாமேவு கோகனகம் அரும்பல்மல ருதல்குவிதல் மருவத் தோயாத்
தூமேவு பரிதிஎனத் தன்முனர்முத் தொழில்நடப்பத் தோயா(து) ஆன்றோர்
பாமேவும் இடங்கொள்வன்னி இரண்(டு) அலமூன்(று) எனஅமரர் பரவ
மேவும்
கோமேவு வன்னிவனக் கொற்றவாள் ஈசர்பதம் குறித்து வாழ்வாம். 2

## நெல்லை நாயகி

ஓர் அறிவு முதலாஜ யறிவுயிர்பைங் கூழ்தழைய ஒருங்கு காக்கும்
பேரறிவு வெளிப்படுப்பான் ஊறுஉணர்ச்சி உயிர்ப்பயிர்முன் பிறங்கக்
காத்துக்
கார்அறிவு தபக்களைந்து காரணநோக்(கு) உறும்பெரியோர் கட்கு
ஆநந்த
நேர்அறிவு மயமான நெல்லைநா யகிமலர்த்தாள் நினைந்து வாழ்வாம்.
3

## கைலாய நாதர்

தன்நிகர்இல் தலப்பெருமை தனைஉணர்ந்தோ மாதவர்தம் சங்கம்
நாளும்
மன்னிவசிப் பதுதெரிந்தோ கழனிநகர் கைலையென வயங்கல்
தேர்ந்தோ
பொன்னிநதிக் கரைமுதல்பல் பலஇருக்க மதுக்குடிஞைப் பொலிதீ ரத்து
வன்னிவனத்(து) இடைப்புகுந்த கைலாய நாதர்பதம் வணங்கி
வாழ்வாம். 4

### நித்திய கல்யாணி

சத்தியநிட் களநிருவி விகாரநிரஞ் சனபரசை தன்னி யத்தை
மெத்தியநல் மலர்மணத்தில் பிரியாமை உருஇடத்தும் விளங்கக் காட்டிப்
பொத்தியபேர் அவிச்சைகெடுத்(து) எவ்வுயிர்க்கும் சுபாநுபவப் பொலிவு
நல்கு
நித்தியகல் யாணபரா பரைஇருபொன் தாட்கமலம் நினைந்து
வாழ்வாம். 5

### நடராசர்

தூலஉடல் அன்னமயம் சூக்கஉடல் பிராணன்முதல் தொக்க மூன்றால்
ஏலஅமர் காரணமெய் ஆநந்த மயம்என்பார் இசைத்த மூன்றும்
சாலஎழும ஆநந்த மயம்ஆக யாவர்களும் தடங்கை கூப்பக்
கோலமணி மன்(று)ஆடும் சிற்பரனை அற்புதனைக் குறித்து
வாழ்வாம். 6

### சிவகாம சுந்தரி

பூண்அரிய கழு(து) இரதம் இந்திரசா லம்கனவில் புவனம் கண்டு
காண்அரிய தமைக்கண்டு சீவர்எலாம் தாமேயாய்க் காணு மாறு
கோண்அரிய சிதாகாசப் பெருந்தலத்தோர் பொருள்இயற்று கூத்துக்
காணும்
யாணர்இயல் சிவகாம சுந்தரிபொன் தாமரைத்தாள் இறைஞ்சி
வாழ்வாம். 7

### தட்சிணாமூர்த்தி (வேறு)

கற்(று)உணர் முனிவர் நால்வரும் காண்பான்
காட்சிகாண் பொருள்ஒரு மூன்றும்
மற்(று)உணர் குறியும் அமைந்தபா வனையும்
மறைதரு குணங்களும் அகன்று
முற்(று)உணர் புரண பரசுக சொரூப
முதல்வராய் மருவஓர் கல்ஆல்
நல்துணர் மலர்க்கைக் குறியொடு மருவு
ஞானதே சிகனடி பணிவாம். 8

### வைரவக் கடவுள் (வேறு)

தெருள்பெரு நலன்அ வாவித் தீவிர தரத்(து)உற் றோர்க்கு
மருள்பெறு மாயை நூறி வல்வினைப் படலம் கீறிச்
சுருளபெரும் கொடிய துக்க நிவர்த்தியும் சுகத்தின் பேறு
அருள்பெரும் செயலால் நல்கும் வடுகனை அடைந்து வாழ்வாம். 9

### வன்னி விநாயகர் (வேறு)

அடைபவர்கள் அவிர்கோசம் கரம்காட்ட அதற்(கு)அமைசா தனந்தோள் காட்ட
உடைதருகீழ் அவத்தைவிழி காட்டமேல் அவத்தைமத ஊற்றம் காட்ட
நடைகெழுமற்(று) அவர்புரியும் பாவனையை மருப்(பு)எடுத்து நன்கு காட்டத்
தடைதவிர்பேர் அருள்கொழிக்கும் வன்னிவிநா யகர்மலர்த்தாள் சார்ந்து வாழ்வாம். 10

### சுப்பிரமணியக் கடவுள்

யோகநிலை யினர்மூலா தாரமுதல் புண்டரிகம் ஓர்ஆறு ஞான
பாகநிலை யினர்காமம் ஆதிஇருள் ஓர்ஆறும் பரவிப் பூப்பப்
போகநிலை நில்லாது புரியும்இளங் கதிரின்முகம் பொலிய மேனி
ஏகநிலை அருள்புரிய ஒளிர்குமரக் கடவுள்அடி இறைஞ்சி வாழ்வாம்.11

### திருநந்தி தேவர் (வேறு)

தம்மை வந்(து)அ டைந்த நல்லோர் தம்மைநன்(கு) உணர்ந்(து)அ வத்தை
மும்மையும் கடந்து தாமே முழுதுமாம் தன்மை வாய்ப்பச்
செம்மைநன் னெறிசால் வேத சிரப்பொருள் சேவை நல்கும்
எம்மைஆள் உடைய நந்தி தேவரை இறைஞ்சல் செய்வாம். 12

### அகத்திய முனிவர்

துன்னுபல் கருமம் சித்த சுத்தியா மாறு செய்து
மன்னும்மற்(று) அதுபெ றாது சைமினி வந்(து) இரப்ப
முன்னுதண் கழனி நாதன் முழு(து)அருள் பெற்று ஞானம்
கொன்னும்இன் புறந வின்ற குறுமுனிக்(கு) அன்பு செய்வாம். 13

## திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்

அருமறை ஏகம் என்ற(து) அமையும்என்(று) உணர்த்தல் போல
ஒருமறை யவன்மால் சுட்டி உணர்தரா ஒன்றைச் சுட்டித்
திருமறை யவனும் காணச் சிறந்(து) ஒருவிரலால் காட்டும்
பெருமறை முழங்கும் காழிப் பிள்ளைதாள் சென்னி சேர்ப்பாம். 14

## திருநாவுக்கரச நாயனார்

உறவினுக்(கு) இகற்கு நஞ்ச உணவினுக்(கு) அமுதி னுக்குப்
பிறவினுக்(கு) ஒருநன் மைத்தாய் நின்(று)அருள் பெற்றி மேவி
மறவினுக்(கு) உணர்வினுக்(கு)ம் மேற்படு நிலைமை வாய்ந்த
துறவினுக்(கு) அரசு நாவுக்(கு) அரசினைத் தொழுதல் செய்வாம். 15

## சுந்தர மூர்த்தி நாயனார்

தினம்மட மாதர் போகம் முதலிய செயினும் தீங்(கு)இல்
மனம்ஒரு நிலையே நிற்பின் என்பது வயக்கி ஆங்குக்
கனமணிக் குழல்மின் னார்ஓர் இருவரைக் கலந்து நாளும்
அநகஇன் பத்து நீங்கா(து) அமர்பவர்க்(கு) அன்பு செய்வாம். 16

## மாணிக்கவாசக சுவாமிகள்

கன்றுநெஞ்(சு) அழிந்து கண்டும் கண்டிலேன் மாயம் என்றும்
சென்றுசென்(று) அணுவாய்த் தேய்ந்து தேய்ந்(து)ஒன்(று)ஆம் சிவனே என்றும்
ஒன்றுகா ணுதல்ஒ ழிந்தேன்ஒன்றும்ஆ காதே என்று
நன்(று)உப நிடதத்(து) உண்மை நவின்றவர்க்(கு) அன்பு செய்வாம். 17

## தண்டீசப் பிள்ளையார் (வேறு)

முனைதரு கொலைத்தொழில் இன்மை முத்திசார்
கனிதரு சாதனம் என்று காப்பவும்
முனிதரு கொலைத்தொழில் இயற்றி முத்திஇன்
கனிதரப் புகுந்தசேய் கழல்கள் போற்றுவாம். 18

### அறுபத்து மூவர் (வேறு)

எதிரும் வல்வினை இன்றித் திகழ்தரப்
பிதிரும் என்மன மும்பெட்(பு) உறுவரால்
முதிரும் காதலின் முப்பத்து மூவர்தாள்
அதிரும் கீர்த்தி அறுபத்து மூவரே. 19

### பஞ்சாக்கர தேசிகர் (வேறு)

கண்ணிய பிறப்பை யாரும் கரி(சு)என வெறுப்பர் மேலோர்
அண்ணிய சிறப்பால் மிக்க ஆவடு துறைக்கண் மேய
புண்ணிய நமச்சி வாய குருபரன் பொன்தாள் போற்ற
நண்ணிய பிறப்பை நாயேன் வெறுப்ப துநன்(று)ஆம் கொல்லோ 20

### அம்பலவாண தேசிகர்

கருவடி(வு) அனைத்தும் நீங்கத் துறைசையில் கருதும் தான்ஓர்
அருவடி(வு) எடுத்துத் தோன்றி அம்பல வாண தேவன்
திருவடி சூட்டி ஆண்டான் சிறியனேன் தலைமேல் அந்தக்
குருவடி முடிமேல் வைப்பேன் என்ப(து)ஓர் கூற்றாங் கொல்லோ 21

### ஆலயப்பணி முதலியன செய்யும் அடியார்கள் (வேறு)

கொற்றவாள் ஈசற்(கு) ஆலய விமான கோபுர மண்டபம் ஆதி
முற்றஆர் வத்தில் புரிந்தவர் புரிவோர் முனிவரும் விழாச்சிறப்(பு)
எடுப்போர்
செற்றபல் உபசா ரங்களும் பரிவால் செய்பவர் பிறவிரும் புநரும்
முற்றஅவர் அவர்கள் யாவர்ஆ யினுயாம் உண்மையில் போற்றுதும்
உவந்தே. 22

### வேறு

மேயபெரும் கழனிநகர் கோயிலூர் எனும்பேர்
மேவஇறை ஆலயத்தை விரித்தஅருள் பெரியோன்
பாயபுனல் திரண்(டு)ஆலி ஆயதெனச் சுத்தப் பரப்பிரம்மம்
இவ்உருக்கொண்(டு) உற்ற(து)எனும் புரணன்
ஆயபுகழ் வேதாந்த சிரவணம்செய்(து) உலகில் அள(வு)இலர்சை
தன்னியமா கப்புரிந்த அறவோன்

தூயமுத்தி ராமலிங்க தேசிகன்என்(று) உரைக்கும் சோதிலிங்க
சொரூபன்எனும் சோதியை ஏத்(து)எ டுப்பாம்.
துற(வு)ஒழுக்கம் அனைத்தும்ஒரு வடிவுகொண்டால் அன்ன
தூயவன்தன் மயமாக யாவையும்கண்(டு) இருப்போன்
மறஒழுக்கம் கடிந்(து)உயிர்கள் சுபாநுபவம் மருவ
வயங்கியவே தாந்த சிரவணம் ஏற்றும் வலியோன்
அறஒழுக்கம் தலைஎடுப்பக் காரணம்கண்(டு) உவப்போன்
அடங்கும்இடம் ஆகியசி தாகாசப் பிரியன்
உறஒழுக்கம் வளர்த்தஅரு ணசலதே சிகன்என்று
உரைத்திடுநந்தி ஈசன்எனும் ஒருவனைவாழ்த் திடுவாம்.
24

## அவையடக்கம்

மேலாய துறவினுக்(கு)ஓர் துணையாகி உள்ளான்
விரிந்தபல புவனமும்கான் றிடுசோற்றில் கண்டோன்
நால்ஆய மறைமுடியின் பொருள்விளங்க எடுத்து
நலமாண வகர்க்(கு)அருளித் தன்மயம்ஆக் கிடுவோன்
பாலாய சிவதருமம் பற்(று)அறப்பா லிப்போன்
பரப்பிரம சுவாநுபூ தியிற்சிறந்த மேலோன்
நூல்ஆய யாவும்உணர்ந்(து) அவர்மனுவின் எடுத்து
நுவனும்ஒரு சிதம்பரதே சிகன்எனும் பெரியோன். 25

## (வேறு)

கற்றவர் கழகம் நீங்காக் கழனிஅம் பதியில் மேவும்
கொற்றவாள் ஈசர் தெய்வ மான்மியம் என்று கூறல்
உற்றஆ ரியத்தை இன்னே மொழிபெயர்த்(து) உவப்பு மேவப்
பற்றவாந் தமிழி னாலே பாடிநீ தருதி என்றான. 26

அத்தகு பெரியோன் கூற அவன்மொழி மறுத்தற்(கு) அஞ்சி
வித்தக ஞானம் இல்லேன் மேதகு கல்வி இல்லேன்
உத்தம குணமும் இல்லேன் ஆயினும் உறுதி ஓர்ந்து
சித்தம் மிக்(கு)உ வப்பு மேவச் செப்பிடல் உற்றேன் மன்னோ. 27

பரைமுதல் வாக்(கு)ஓர் நான்கும் பகர்சிவம் முதல்ஓர் ஐந்தும்
விரைதர எழுப்ப லாலே மேயஇக் கவிகள் எல்லாம்
புரைஅறப் புகன்றான் என்றும் புரையுறப் புகன்றான் என்றும்
உரைசெயார் என்னை முன்னிட்(டு) உண்மைநூல் உணர்ந்த
சான்றோர். 28

பார்த்திடப் பட்ட எல்லாம் பரவெளிப் பரப்பே ஆகச்
சீர்த்திடக் காணும் தெய்வக் கழனிமா தவர்கள் செல்வம்
கூர்த்திட அருளா நிற்கும் கொற்றவாள் ஈசர் மேன்மை
ஓர்த்திட வேறு காணார் எனல்துணிந்(து) உரைக்கல் உற்றேன். 29

தூயவான் கங்கை மேய சுடர்த்திரு முடிமேல் மண்ணில்
மேயவான் புனலும் ஆட்ட வெறுத்திலாக் கழனி ஈசர்
பாயநூற் கேள்வி சான்றோர் பாடல்சால் செவியில் சாலாத்
தீயனேன் பாட்டும் சென்று சிவனுதல் வழக்கால் மன்னோ. 30

### சிறப்புப் பாயிரம் (வேறு)

பூமேவு கழனிநகர்க் கொற்றவாள் ஈசர்திருப் புராணம் செய்தான்
மாமேவு ஞானகலை முதலாய பலகலையும் வரம்பு கண்டோன்
தேமேவு முகில்தழுவும் திரிசிரா மலைஅமரும் செல்வன் நாளும்
பாமேவு மீனாட்சி சுந்தரநா வலவன்உயர் பண்பி னானே. 1

தூயமுத்தி ராமலிங்க தேசிகன்பேர் அருள்பெற்றோன் சுகுண ஞானம்
மேயஅரு ணாசலதே சிகன்அவன்பால் அருள்பெற்று விளக்கம் சான்ற
பாயபுகழ்ச் சிதம்பரதே சிகன்கேட்க உயர்கழனிப் பதிப்பு ராணம்
வாயமையப் புனைந்(து)உரைத்தான் மீனாட்சி சுந்தரன்நா வலன்மிக்
கோனே. 2

*பாயிரம் நிறைவுற்றது.*



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

கோவிலூர் - காரைக்குடி 630 307.

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)

(அரசு அனுமதி பெற்றது)

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94434 42361**

பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள் :

**B.A., English**

**B.Sc., Computer Science**

**B.Com.,**

**B.Com. (C.A).,**

**B.B.A.,**

**B.Sc., Maths** (Subject to Affiliation)

## 2014 - 2015 ஆம் கல்வியாண்டு மாணவர் சேர்க்கைக்கான விண்ணப்பங்கள் 4.4.2014 முதல் வழங்கப்பெறும்.

விண்ணப்பங்கள் கிடைக்குமிடம் :

நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி

கோவிலூர்